# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Thursday, the 5th July 1962.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half-past eight of the clock, Mr. Speaker (THE HON. SRI S. CHELLAPANDIAN) in the Chair.

## I—QUESTIONS AND ANSWERS

## STARRED QUESTIONS

### லாடபுரம் அருகில் ஏரி கட்டுதல்

** 127 கேள்வி.—திரு. து. ப. அழகமுத்து :* கனம் விவசாய அமைச்சர் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

பெரம்பலூர் தாலூகாவில் லாடபுரம் அருகில் ஏரி கட்டுவதற்காக செய்யப்பட்ட சர்வேயின்மீது எப்போது நடவடிக்கை மேற்கொள்ளப்படும் ?

THE HON. SRI P. KAKKAN : The proposal for the formation of a tank near Ladapuram in Perambalur taluk is under investigation. The soil samples have been sent for laboratory test regarding their suitability for formation of tank bund.

The proposals will be considered as soon as they are finalized by the Chief Engineer (Irrigation) and the Board of Revenue and submitted to Government.

**திரு. து. ப. அழகமுத்து :** அதிகப்படியான நிலங்களை சாகுபடிக்குக் கொண்டுவந்து உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு உதவியாக இந்த வேலை விரைவில் துவக்கப்படுமா ?

**கனம் திரு. பூ. கக்கன் :** இந்தக் கரையைப்போடுவது என்பது அங்குள்ள மண் தகுதியைப் பொறுத்து இருக்கிறது. அதைப் பற்றி சீப் இஞ்சினியரைக் கேட்கப்பட்டிருக்கிறது. அதைப்பற்றி போர்டு ஆப் ரெவின்யூவும் பரிசீலனை செய்துவருகிறார்கள். அவர்கள்தான் அதைப்பற்றி முடிவு எடுக்கவேண்டியதாக இருக்கிறது. அவர்கள் பரிசீலனை செய்து ஒரு முடிவு எடுக்கப்பட்டு ரிபோர்ட் வந்த பிறகுதான் அரசாங்கம் அதைப்பற்றி முடிவு எடுக்கும்.

### ஆதாரப் பயிற்சிப் பள்ளிகள்

** 128 கேள்வி.—திரு. ஏ. ஆறுமுகம் :* கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருவண்ணாமலையில் ஒரு ஆதார ஆசிரியர் பயிற்சிப் பள்ளிக்கூடம் **(Senior and Junior Basic Training School)** ஆரம்பிப்பதற்கு ஆற்காடு லூதரன் சபையின் காரியதரிசியிடமிருந்து விண்ணப்பம் ஏதாவது வந்துள்ளதா ?

[5th July 1962

(இ) அப்படியானல், அதை வரும் கல்வி ஆண்டிலேயே (1962-63) திறக்க அனுமதி கொடுக்க உத்தேசமுண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) No, Sir.

(இ) Does not arise.

**திரு. ஏ. ஆறுமுகம்:** சாத்தனூர் அணைக்கட்டு இடத்தில் ஏராளமான கட்டிடங்கள் இருக்கின்றன. அவைகளில் ஒரு ஆசிரியர் பயிற்சி பள்ளியைத் திறப்பதற்கு அரசாங்கம் முன் வருவார்களா?

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** கட்டிடங்கள் இருக்கின்றன என்ற காரணத்திற்காக பயிற்சி பள்ளிக்கூடங்கள் திறக்க வேண்டும் என்பது இல்லை. இனிமேல் பயிற்சி பள்ளிக்கூடங்களை திறப்பது இல்லை என்று அரசாங்கம் முடிவு எடுத்திருக்கிறது. அந்த முடிவையொட்டி அங்கு புதியதாக பள்ளியை திறப்பதற்கு இல்லை.

SRI C. CHIRANJEEVULU NAIDU : Is there any proposal to open basic training schools in places where 15 acres of land are given away as gift and also accommodation is provided?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I have no such information.

**திரு. ஆ. தங்கவேலு:** ஆதாரப் பயிற்சிப் பள்ளிகளுக்கு என்று மாணவர்களை தேர்ந்தெடுக்கும்போது அவர்கள் எந்த அடிப் படையில் தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள் என்பதை அறிய விரும்பு கிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** இதற்கு தனியாக கேள்வி போடவேண்டும்.

**திரு. கி. இரா. சம்பந்தம்:** கனம் அமைச்சர் அவர்கள் சொல்லும்போது தற்சமயம் பேசிக் ட்ரெயினிங் ஸ்கூல்களை திறப் பதற்கு இல்லை என்று முடிவு செய்திருப்பதாகச் சொன்னுர்கள். அப்படி சர்க்காருடைய முடிவு என்று சொன்னல் 'நான்-பேசிக்' ஸ்கூல்களை திறப்பது என்று முடிவு செய்திருக்கிருர்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** அது அல்ல கருத்து. இப்பொழுது இருக்கிற ஆதாரப்பள்ளிக்கூடங்களில் வேண்டிய ஆசிரியர்கள் இருக்கிருர்கள். ஆகவே இதற்குமேல் பயிற்சி பள்ளிக்கூடங்கள் தேவையில்லை என்ற கருத்தில்தான் அப்படி முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி:** ஸார், பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் கிடைப்பது மிகவும் சிரமமாக இருக்கிற காரணத்தால் புதிய பள்ளிக்கூடங்களை திறப்பதில்லை என்று முடிவு செய்திருப்பதாலும் எங்கெங்கே பள்ளிக்கூட இடங்கள் தேவைப்படுகின்றனவோ

5th July 1962]

அங்கங்கே சில இடங்களில் தேவையான அளவுக்கு புதிய பள்ளிக் கூடங்களை திறக்க சாங்ஷன் செய்ய சர்க்கார் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** அது அந்தந்த மாவட்டத்தின் நிலைமையைப் பொறுத்து இருக்கிறது. எங்கெங்கு திறக்க தேவைப்படுகிறதோ அங்கங்கு திறக்க கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

**திருமதி பி. கே. ஆர். லட்சுமிகாந்தம் :** தலைவர் அவர்களே, ஜூனியர் பேசிக் ட்ரெயினிங் ஸ்கூல் ஏற்படுத்தாமல் இருப்பதற்கு சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** அப்படி ஒன்றும் உத்தேசம் இல்லை. வேண்டிய விவரங்களைப்பற்றி கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.

**திரு. மீ. கல்யாணசுந்தரம் :** ஸார், ஆதாரக் கல்வி முறை நம்முடைய நாட்டின் தேவைக்கு ஏற்றதாக இருக்கிறதா ? அல்லது மாறுதல் செய்ய வேண்டியதாக இருக்கிறதா ? அதைப்பற்றி பரிசீலனை செய்து அதற்கு வேண்டிய மாறுதல்களைச் செய்வதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** எனக்குத் தெரிந்த வரையில் அந்தக் கொள்கையில் கவனம் செலுத்திக்கொண்டுதான் வருகிறோம். ,அகில இந்தியாவிலும், மத்திய சர்க்காரிலும் அதற்கு வேண்டிய கவனம் செலுத்திக்கொண்டுதான் வருகிறார்கள். அந்த முறையில் நானும் கவனம் செலுத்திக்கொண்டுதான் வருகிறேன். அதன் முழு விவரத்தை ஒரு கேள்விக்கு பதில் சொல்லும் அளவில் விடை அளிக்க முடியாது. ஆகவே தனிக் கேள்வி போட்டால், அதைப்பற்றி பரிசீலனை செய்து பதில் சொல்லலாம்.

*129 கேள்வி.—**திரு. கு. கோபால கவுண்டர் :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப் பாரா—

*1962-63 நிதி ஆண்டில் செஞ்சி தாலுகாவில் ஆசிரிய ஆதார பயிற்சிப் பள்ளி திறக்க உத்தேசமுண்டா ?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

**திரு. கு. கோபால கவுண்டர் :** சென்ற ஆண்டிலேயே இதற்காக முயற்சி எடுத்து கட்டிடம் கட்டுவதற்கு என்று பத்து ஏக்கர் நிலம் கேட்டார்கள். அதன்மேல் பத்து ஏக்கர் நிலம் விடுகிறேன் என்று எழுதிக்கொடுத்திருந்தேன். ஆகையால் இந்த ஆண்டிலாவது அதைத் திறக்க முயற்சி எடுப்பார்களா என்பதை அறிய விரும்பு கிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கனம் அங்கத்தினர் அவர்கள் இதில் இவ்வளவு அக்கரை செலுத்துவதற்கு அதை வரவேற்று அவரை நான் பாராட்டுகிறேன். ஏற்கெனவே அரசாங்கம் இனிமேல் பேசிக் ட்ரெயினிங் ஸ்கூல் திறப்பதற்கு இல்லை என்று முடிவு எடுத்திருப்பதால் இதை ஏற்றுக்கொள்வதற்கு இல்லை.